27th September 1958]

SRI S. M. ANNAMALAI : இரவு பூராவும் கரண்டு இருக்கிறது. ஆனுல் காலை 6-லிருந்து 12 மணி வரையிலும், 12 மணியிலிருந்து மாலை 6 வரையிலும் ஆக இரண்டு ஷிப்டுகள் இருக்கின்றன. அதை ரத்து செய்ய வேண்டுமென்று கேட்டேன்.

THE HON. SRI V. RAMAIAH : கனம் அங்கத்தினர் கேட்டதற்கு மேல் நான் அதிகமாக பதில் சொல்லிவிட்டேன் என்று நினைக்கிறேன். பகல் நேரத்தில் இரண்டு ஷிப்டுகள் இருப்பது எனக்கு நன்ருகத் தெரியும். ஆனுல், மாகாணம் பூராவும் இருக்கக்கூடிய நிலைமையை பார்த்து, விவசாயிகளுக்கு அதிக ஆதரவு கொடுக்க வேண்டும், விவசாயிகள் உற்பத்தியை அதிகப்படுத்த வேண்டும் என்று கருதி, இரவு நேரத்தில் மட்டும் சில விவசாயிகளுக்கு மின்சாரம் கொடுத்துக்கொண்டிருந்ததை இப்பொழுது ரத்து செய்து, அவர்களுக்கு பகல் நேரத்தில் கொடுப்பதற்கு இப்பொழுது அரசாங்கம் உத்தரவு போட்டிருக்கிறது.

*Madurai District Board*

*563 *Q.*—SRI N. R. THIAGARAJAN : கனம் ஸ்தல-ஸ்தாபன அமைச்சர் அவர்கள் தயவுசெய்து பதிலளிப்பாரா—

மதுரை ஜில்லா போர்டின் தற்போதைய நிதி நிலையென்ன ?

THE HON. SRIMATHI LOURDHAMMAL SIMON : According to the Budget Estimate for 1958–59, the financial position of the Madurai District Board like several other district boards is not satisfactory.

SRI N. R. THIAGARAJAN : ஆசிரியர்களுக்கு ஒழுங்காக சம்பளம் கொடுக்கப்படாததோடு, கண்டிராக்டர்களுக்கும் பணம் ஒழுங்காக கொடுக்கப்படவில்லை என்று தெரிகிறது. இருக்கிற பணம் துர்விநியோகம் செய்யப்படுகிறதா, கணக்கு வழக்குகள் சரியாக வைக்கப்படுகிறதா என்று பரிசீலனை செய்யப்படுமா ? முதலில் அட்வான்ஸாக ஜில்லா போர்டுக்கு ரூபாய் 5 லட்சம் கொடுக்கப்படுமா ?

THE HON. SRIMATHI LOURDHAMMAL SIMON : தனிக் கேள்வி கேட்கவேண்டும்.

SRI D. S. AUTHIMOOLAM : ' ஸாடிஸ்பாக்டரி இல்லை ' என்று சொல்லியிருக்கிருர்கள். அதில் விவரமே இல்லை. பட்ஜெட்டில் டெபிஸிட்டா ? ஜெனரல் அக்கவுண்டில் எவ்வளவு டெபிஸிட் ? எலிமெண்டரி எஜுகேஷனில் எவ்வளவு டெபிஸிட் என்று சொல்ல முடியுமா ?

THE HON. SRIMATHI LOURDHAMMAL SIMON : ஜெனரல் டெபிஸிட் ரூபாய் 6,15,490, அதில் டி.எ. கிராண்டு ரூபாய் 4,08,585 ; மீதி டெபிஸிட் இருப்பது ரூபாய் 2,06,905.

SRI S. LAZAR : மதுரையில் மட்டும் அல்லாமல், வேறு ஜில்லா போர்டுகளும் இதேமாதிரி திருப்திகரமான நிலையில் இல்லை என்று அறிவிக்கப்பட்டிருக்கிறது. அவைகளை திருப்திகரமான நிலைமைக்கு கொண்டு வருவதற்கு சர்க்கார் நடவடிக்கை எடுக்குமா ?

THE HON. SRIMATHI LOURDHAMMAL SIMON : நடவடிக்கை எடுத்துக்கொண்டிருப்பது கனம் அங்கத்தினர்களுக்குத் தெரியும். இவைகளை யெல்லாம் சீர்திருத்தம் செய்து, ஜில்லா போர்டுகள் மாற்றி அமைக்கப் பட்டு வருகின்றன.